*Kumaran̲*

*Supplement: Malar 3, ital̲ 5*

*November 29, 1928*

Record no. 313

Kumaran Supplement. Reg. No. M. 1823.

உ

சிவமயம்.

# தனவைசிய சமூக அனுபந்தம்.

நாட்டுக்கோட்டையாருக்கு மட்டும் அனுப்பப்படும்.

மலர் ௩. இதழ் ௫. | விபவ ௵ கார்த்திகை ௴ ௧௪-உ (29—11—1928.) | இதன் விலை கால் அணா.

மாவாழ மேழ வழிநகரத்தார்க்கென்றும்
கோவாழுஞ் செல்வக் குலதெய்வ—மாவாழ்
மரகதவி நாயகனை மாமலர்தாய்வாழ்த்த
வரநலவாழ் வெல்லாம் வரும்.

—நகரத்தார் சரித்திரம்

## கட்டுப்பாடு.

மனிதர்கள் உலகத்தில் வாழ்வதற்குச் சில கட்டுப்பாடுகள் இன்றியமையாதன. மனம்போன போக்கில் ஒவ்வொருவரும் வாழ்வதென்றால் உலகில் ஒரு காரியமும் சீர்பெற நடக்கமுடியாது. ஒவ்வொருவர் ஒவ்வொரு அபிப்பிராயங் கொண்டால் பொதுவான வாழ்க்கையொன்று ஏற்படமுடியாது. பொதுவான வாழ்க்கைமுறை மனித சமூகத்திற்கு இன்றியமையாதது வேண்டப்படுகின்றது. சமய வழியாகவோ, நீதி முறையாகவோ, தேசிய அமைப்பாகவோ எப்படியாவது ஒரு பொது வாழ்க்கைத்திட்டம் மனிதனுக்கு அவசியம். இவ்வுண்மையை உணர்ந்த உலகமக்கள்யாவரும் தத்தமக்கேற்றவாறு மதத்தையும், நீதிமுறையையும், தேசப் பொதுவாழ்க்கையையும் அமைத்துக் கொண்டிருக்கின்றனர். நமது நாட்டில் இம்மூன்று அமைப்புக்களோடு ஜாதிய அமைப்பு ஒன்று வகுக்கப்பட்டது. ஜாதிய அமைப்பு அமைத்த காலத்தில் எந் நோக்கங்கொண்டு அமைக்கப்பட்டிருப்பினும் இந்நாள் அதன் கொடுமை அதிகப்பட்டுப் போய்விட்டது. அது ஒரு புறமிருக்க, நமது தனவணிக சமூகத்தார் கூடியவரை ஜாதி வேற்றுமையை மிகுதியும் கருதாமல் அன்று முதல் இன்றுவரை வாழ்ந்து வந்திருக்கின்றார். இச்சமூகத்தார் மிகுந்த ஒற்றுமையோடும், சிறந்த கட்டுப்பாட்டுடனும் வாழ்ந்து வந்திருக்கின்றாரென்பது சிறிது சிந்திப்பார்க்கும் விளங்குவதாகும். கோவில் வாசல், பங்காளிகள் கட்டுப்பாடு, தொண்ணூற்றூறூர்க்கூட்டம், ஊர்க்கூட்டம் ஆகியவை நம்மினத்தாரின் வாழ்வுக்குப் பேரரண் செய்து வந்தன. கட்டுப்பாடு வேண்டுமென்று கூறுவதன் தத்துவம், அக்கிரமம் செய்யும் ஒருவர் பலமுற்றிருப்பாராகுல் அவரை அடக்கவும், செல்வத்தாலோ, அறிவாலோ எழ்மைப்படுபவரை உயர்த்தி நன்னிலைப்படுத்துவதும், பொதுவாக இக்கூட்டத்தினர்க்குப் பிறரால் தீமை வராதவாறு பாதுகாத்துக் கொள்ளுவதும், பிறவுமாகும். இம்மாதிரியே நமது சமூகத்தார் நெடுங்காலம் நல்வாழ்வு வாழ்ந்திருக்கின்றனர். சென்ற சில ஆண்டுகளாக இந்தக் கட்டுப்பாட்டு வாழ்வு உடைபட்டு விட்டது. வலிமையுள்ளவன் செய்யும் அக்கிரமங்களைக் கேட்க வகையில்லை—முடியவில்லை. ஏழை எளியவர் அநியாயமாகக் கூடத் தண்டிக்கப்படுகின்றனர். நியாயமான சில திருத்தம் செய்வதற்காகத் தண்டிக்கப்படுவது முண்டு. எளியவர்க்கு உதவி யென்பது காணுத பொருளாகிவிட்டது. அதற்குப்பதிலாக எளியவர் பலர் துன்பக்கடலுள் கிடந்து உழல்கின்றார்; ஆதரிப்பாரில்லை.

பங்காளி கட்டுப்பாடு இருப்பதனால் உண்டாகும் கஷ்டங்கள் எழுத முடியாதனவாகும். புலாலுணவை விட்டதற்காகவும், படைப்பில் ஆட்டின் கழுத்தைக் கத்திகொண்டு அறுக்காததற்காகவும் பங்காளிகள் கூட்டத்தில் பலர் தள்ளிவைக்கப்படுகின்றார். கையில் காசில்லாவிட்டாலும்—கஞ்சிகுடிக்க வழியில்லாவிட்டாலும் எங்காவது கடன் பெற்று, வீடு வாசல்களை அடைவு வைத்தேனும் விசேஷங்கள் செய்து பங்காளிகட்குப் பலநாட்கள் சோறு போட்டு வரிசைகளும் வழங்கவேண்டும். இல்லாவிட்டால் பங்காளி கூட்டத்தால் தள்ளப்படுவதைக் காணலாம். இம்மாதிரி சாப்பாட்டிலும், பலகாரத்திலும், சட்டிமுட்டியிலும், சீனிப் பொட்டணத்திலும் வெகு கூர்மை காட்டித் தள்ளி வைக்கிறவரை செல்லும் பங்காளி கூட்டம் துயருறும் மக்களுக்குச் சிறு நலனுவது செய்வதுண்டா? எல்லாப் பங்காளி குழுவிலும் கல்யாணம் செய்யப்பெறாத—வகையில்லாத வாலிபர்கள் எத்தனைபேர்களிருக்கின்றனர். பெரும் பொருளின்மையால் முப்பது வயதுவரை வளர்ந்து விவாகமின்றி வருந்தி நிற்கும் ஆடவர்க்கும், அவரைப் பார்த்துப் பார்த்து அழுது கொண்டிருக்கும் தாய் தந்தையர்க்கும் ஆறுதல் கூறுவார் யார்? அவரின் கல்யாணத்திற்குப் பங்காளி கூட்டம் ஏதாவது உதவி செய்கிறதா? ஒன்றுமில்லை யென்று திட்டமாகக் கூறலாம். அதே பங்காளி குழுவில் பெரும் பொருள் வைத்திருப்பவர் தம் குடும்பத்திற் பிறந்துள்ள பல் முளைக்காத சிறுவர்கட்கெல்லாம் கல்யாணம் கட்டிக் களிப்பதைக் காணலாம். அந்தக் கல்யாண வீடுகளில் பெண்ணகப்படா திருக்கும் பெரிய மாப்பிள்ளைகள் உக்கிராணம் காக்கவும், சந்தையில் காய்கறி வாங்கி வந்திடவும், குதிரைப் பின்னாலே போகவும், பந்தி விசாரிக்கவும் உபயோகப் படுகின்றனரென்பது கண்ணீர் விடத்தக்க செயலன்றோ? பணக்காரர் சுக முறுகின்றார் என்பதைக் குறித்தொண்டு நாம் இதனையெழுதவில்லை. ஆனால் ஏழைமக்களும், அவருக்கு உதவி செய்ய விரும்பாத பணக்காரரும் ஒரு பங்காளிகளாயிருப்பது இன்றுமீளாத் துன்பத்தைத் தருகின்றது. பணக்காரரும், பணக்காரரும் சேர்ந்து பங்காளிகளாக விருப்பதென்றால் ஒத்தவாழ்க்கை நிகழக் கூடும். பணக்காரரும் ஏழையும் ஒரு சங்கிலியில் பிணைக்கப்பட்டிருப்பதால் ஏழைகளின் நிலைமை பரிதாபகரமாகி வருகிறது. பணக்காரர்கள் தங்கள் பங்காளி குழுவிலுள்ள பணங்குறைந்தவர்களை அலட்சியப்படுத்துவதும், இழிவாகக் கருதுவதும் சாதாரண இயல்பாகக் கொண்டிருப்பதையும் காண்கிறோம். முன்னாளில் பங்காளி குழுவினர் ஒருவருக்கொருவர் உதவி புரிந்து கொண்டனர். பணக்காரராயுள்ளவர்கள் சேர்ந்து பணங் குறைந்துள்ள குடும்பங்கட்குப் பலவிதப்பட்ட உதவிகளைச் செய்து வந்தனர். கல்யாணங்கட்குக் கடனாவும், இனமாகவும், பொருள் கொடுத்து உதவினர். வியாபாரங்களில் நட்டமேற்பட்டால் இனமாகவும், கடனாகவும் பொருள் ஈந்து பாதுகாத்தனர். புதிதாக வியாபாரம் தொடங்குவார்க்குப் பொருள் கொடுத்துக் கை தூக்கிவிட்டனர். இந்நாள் இவையெல்லாம் ஒழிந்தன. ஆனால் கட்டுப்பாடுமட்டும் இருப்பதாகக் கூறிக்கொண்டு பல இன்னலை விளைப்பதற்கு மட்டும் இடமிருக்கிறது. ஒன்று இக் கட்டுப்பாடுகளைச் சீர்ப்படுத்தவேண்டும்; இன்றேல் ஒழிய வேண்டும். இரண்டுமின்றித் திரிசங்கு சுவர்க்கமாக நடுவே நிற்பதால் உண்டாவது துன்பமேயாகும்.

---

## ஊழியர் சங்கமும், ராய. சொக்கலிங்கனும்

காணுடுகாத்தான் திரு. வைசு. ஷண்முகஞ் செட்டியாரவர்கள் எழுதுவது:—

இதே தலைப்பின் கீழ் முன் வெளிவந்த விஷயத்தை மறுப்பது போல திரு. ராய. சொக்கலிங்கன் அவர்களும் மற்ற சில அன்பர்களும் ஊழியன் பத்திரிகையில் பலவாறாக எழுதியிருக்கிறார்கள். பகைமையான எண்ணம் மேற்கொண்ட காலத்து விஷயங்களை எழுதுவதில் தத்தமக்கு வேண்டியவாறு திருத்தி எழுதுவது இயல்பாய் விட்டது. சிறுமைத் தனமான எண்ணங்கள் தலை தூக்கி நிற்கும் சந்தர்ப்பத்தில் வாதம் செய்பவரோடு (தனிமையாக இருந்து முடிவு கட்டும் அதிகாரி ஒருவர் முன் இன்றி) வாதம் பேசுபவர் மனம் ஒப்ப விஷயத்தை எடுத்துப் பேசவோ, எழுதவோ, எந்த அறிவாளியினாலும் முடியாது என்பதை உலகம் அறியும். ஆகவே ஒரு பாவமும் அறியாத மற்ற அன்பர்கட்கு பதிலெழுதவதை விடுத்து சங்கத்துக்கு நேரே சூழ்ந்து தங்கலமே பெரிதென்ற உட்கருத்தோடு வஞ்சக வேஷம் தாங்கிய திரு. ராய. சொக்கலிங்கன் அவர்களின் நிலைமையை சங்க சம்பந்தப்பட்ட வரையில் நான் தெரிவிக்க வேண்டியது எனது கடமை என்றே நினைக்கிறேன்.

நான் எழுதும் விஷயங்கட்கு அவர் எழுதுகிற பதிலைப் பார்த்து யாவரும் மயங்க மாட்டார்கள். நாம் எழுதுகிற நியாயமான விஷயங்களனைத்தையும், தனக்கு எழுதத் தெரியுமென்று நினைத்துக்கொண்டு "எல்லாம் பொய்; எல்லாம் புரட்டு; பதில் எங்கே யிருக்கிறது; இவற்றை அறிஞர் ஒப்புக்கொள்ளமாட்டார்; ஆதாரமில்லை" என்று எதையாவது எழுதிக்கொண்டே போவார். இது அவருடைய இயற்கையான வழக்கம். ஒரு நன்மையும் பயவாத சிறுமைத் தனத்தையே வளர்க்கும் இவர் வாதத்துக்கு சமாதானம் சொல்ல நான் முன் வரவில்லை. ஆனால் பொதுஜனங்கட்கு உண்மையைக் கூறிவிட வேண்டியது எனது கடமை என்றே சில வார்த்தைகளைச் சொல்ல முன் வந்தேன். அவர் என்னைப்பற்றி எழுதியிருப்பவைகளில் ஒரு முக்கியமான விஷயத்துக்கு மட்டும் இன்று பதில் சொல்லி விட்டுவிடுகிறேன்.

ஊழியன் பத்திரிகையை திரு. முருகப்ப செட்டியார் அவர்கள் நடத்திவந்த காலத்தில் தனக்கொரு உதவியாளர் வேண்டுமென்று சொன்ன சந்தர்ப்பத்தை துன்மார்க்க வழியில் உபயோகப்படுத்தி பலன்பெற்று சங்கத்தைக் கெடுத்த இவர், திரு. முருகப்ப செட்டியாரவர்கட்கு அந்தக் காலத்தில் சங்கத்தில் ஆதிக்கமில்லையென்று இன்று எழுதுகிறார். அதற்கு உதாரணமாக ஊழியன் பத்திரிகையை ஒரு காலத்தில் முருகப்ப செட்டியார் அவர்கள் என்னுடைய மேற்பார்வையில் நடத்தினார்களென்று குறிப்பிடுகிறார். விஷயம் வருமாறு:—

முன்னெழுதியபடி இரு வேலைகளையும் தானே கவனித்துக் கொள்வதாகக் கூறி திரு. ராய. சொக்கலிங்கன் அவர்கள் பத்திராதிபர் ஸ்தானத்தை அடைந்த அன்று முதல் பத்திரிகையின் அரசாங்கப்பொறுப்பு

முரு. பேருக்கிருந்தாலும் பிரசுரிக்கிற நிர்வகிக்கிற பொறுப்புக்களை திரு ராய. சொக்கலிங்கன் அவர்களே வகித்து வந்தார். அது முதல் ராய. சொ. குறிப்பிடும் குன்றக்குடிக் கூட்டம் நடைபெறுகிற வரை சொ. முரு. சங்கத்தின் நன்மை கருதி தம்முடன் மனவேறுபாடு கொண்ட ராய. சொ.வையே பத்திரிகை நடத்த விட்டிருந்தார். பத்திரிகை அச்சுக்கூட சம்பந்தமான சகல பொறுப்பும், ராய. சொ. இடம் விடப்பட்ட பிறகும் அரசாங்கத்தாருக்கு சொ. முரு. வே பொறுப்பாளியாக இருந்து வந்தார். குன்றக்குடிக் கூட்டம் நடந்த அன்று நிகழ்ந்த பல நிகழ்ச்சிகள் காரணமாக "தாம் இனி அரசாங்கப் பொறுப்பாளியாக இருந்து கொண்டு ராய. சொ. இடம் பத்திரிகையை நடத்தும் உரிமையை விட்டிருக்க முடியாது" என்று சொ. முரு. கூறினார்கள். அரசாங்கப் பொறுப்பை ராய. சொ. பேருக்கு மாற்றும் வரை சொ. முரு. வே ஆசிரியராக இருந்து நடத்தட்டும் என்ற பேச்சு வந்த பொழுது ராய. சொக்கலிங்கன் பத்திரிகையின் ஆசிரியர் பதவியைத் தான் வகித்தபிறகு வேறொருவர் அப்பதவியை வகிப்பது கூடாதென்றும், அரசாங்க உத்திரவு தன் பேருக்கு வரும் வரையில் பத்திரிகையை நிறுத்திவிட வேண்டும் என்றும் கூறினர். பத்திரிகையை நிறுத்துவது சரியன்று என்றும், சொ. முரு. அரசாங்கப் பொறுப்பைத் தான் வகித்துக் கொண்டு எதை எழுதினாலும் சரியென்று சங்க நலங் கருதி ராய. சொ. இடம் இதுவரை விட்டிருக்க ராய. சொ. வுக்கு அரசாங்கப் பொறுப்பு ஒன்றுமின்றி சங்கத் தீர்மானத்தில் பத்திராசிரியர் என்று எழுதி வைத்த பொறுப்புக்காக உண்மையில் அரசாங்கப் பொறுப்பு வகிக்கும் ஒருவரிடம் பத்திரிகையை நாலைந்து வாரத்திற்கு விட ராய. சொ. மனமின்றி நிறுத்தச் சொல்வதற்காக நிறுத்துவது சரியில்லை யென்றும், முரு. வே நடத்தட்டும் என்றும் அங்கத்தினர்கள் வற்புறுத்தினார்கள். அப்படியானால் சொ. முரு. எழுதுவதை அச்சுக்குக் கொடுத்துத் தான் பார்த்த பிறகு வெளி வரட்டும் என்று ராய. சொ. சொன்னார். இந்த நிபந்தனையுமின்றி முரு. விடம் பத்திரிகையை ஒப்புவிப்பீர்களானால் திரும்பவும், தான் பத்திராதிபராக இருக்க முடியாதென்றும், ராய. சொ. சொன்னார். முரு. வும் பத்திரிகையை நீண்டு நடத்த முடியாதென்றும், சங்க நன்மைக்காக அரசாங்கப் பொறுப்பை மாற்றுகிறவரை சில வாரங்கட்கு நடத்துவதாகவும் கூறினர்கள். இந்நிலையில் இவ்விருவரில் ஒருவரை பத்திராதிபராக வைத்து பத்திரிகையை நெடுக நடத்தி வர வேண்டியது சங்கத்தின் பொறுப்பாக இருந்தது. சங்கத்தில் பல அங்கத்தினர்களிருக்கும்போது இவ்விரண்டு பேர் தான் இருக்கின்றனரென்று கூறுவது ஆண்மையா வென்று பெரும் பேரறிஞரான ராய. சொ. வாதம் பேசுவார். உண்மையில் சங்கத்து அங்கத்தினர்களுள் பத்திராதிபராக இருக்கவேண்டும் என்ற ஆர்வத்தோடு தமிழ் பாஷையைப் பிழையின்றி ஒருவாறு எழுதக்கூடியவர் இவர் இருவர் தானென்பதை அங்கத்தினர் எல்லோரும் அறிவர். ஆகவே பத்திரிகையை நெடுக நடத்த விரும்பாத முரு.வை விட்டுவிட்டு ஒரு நிபந்தனைக் கிணங்கி நெடுக நடத்த இணங்கிய திரு. ராய. சொக்கலிங்கன் அவர்களின் கருத்துக்குச் சிறிது இணங்கி வரவேண்டியது சங்கத்தின் தலை விதியாக முடிந்தது. ஆகவே ராய. சொ. வின் கருத்துக்குப் பெரும்பாலும், இணங்கி ராய. சொ. பேருக்கு அரசாங்கப் பொறுப்பை மாற்றும் வரை என்னுடைய மேற்பார்வையில் சொ. முரு. பத்திரிகை நடத்துவதென்று முடிவு செய்து ராய. சொ. வை வற்புறுத்தியும் சொ. முரு. வை மிகக் கேட்டுக்கொண்டு பெருஞ் சமாதானப் படுத்தியும், அத்தீர்மானம் நிறைவேற்றப் பட்டது. இதில் சமாதானத்துக்காக நான் மேற்பார்வை பார்ப்பதென்று குறிப்பிடப் பட்டதேயன்றி சொ. முரு. பேரில் நம்பிக்கையில்லாமலன்று. இந்நிபந்தனைக்கு சொ. முரு. ஒப்புக்கொண்டது அவருடைய பெருமையைக் காட்டுமேயன்றி சிறுமைக் குணம் மேற்கொண்டு நிற்கும் திரு. ராய. சொக்கலிங்கன் அவர்கள் கொள்ளும் பொருள் பொருந்தாதிருப்பதோடு அவருடைய சிறுமைக் குணங்கள் வெளிவரவும் ஏதுவாக இருந்தது பாவம்!

இனி, ஒரு சிறிதும் நன்மை பயக்காத நடு நிலைமை வகித்துத் தீர்ப்புக்கூறும் ஒரு அதிகாரி இல்லாத வீண் ஆபாச சச்சரவை வளர்க்கும் ராய. சொக்கலிங்கன் அவர்களின் குதர்க்க வாதங்கட்கு நான் இனிப் பதில் எழுதுவது ஓர் சிறிதும் தகுதியற்றதென்று கருதுகிறேன்.

---

# வெறும் புலப்பம்.

ஐப்பசி உஅ, கார்த்திகை நஉகளில் வெளியான ஊழியன் பத்திரிகை இரண்டிலும், "நேரே வரவுமில்லை சரியான பதிலுமில்லை" என்ற தலைப்பில் பழ. நாராயணஞ் செட்டியார் பேரால் ஒரு புலப்பம் வெளியாகியிருக்கிறது. நான்எழுதியுள்ளவைகளை விளங்கிக்கொள்ளும் சக்தி இல்லாமலோ, அல்லது எதையாவது பதிலாக எழுதித்தொலைக்கவேண்டுமென்பதற்காகவோ இவர்கள் புலம்பித் தவிக்கின்றனர். 'தன்னுடைய வியாசம் இவ்வாறு வெளிவந்திருக்கிறது' என்று ஐதர்காலத்தில் சொ. முரு. இவருக்கெழுதினாராம். அந்தக் கடிதம் முழுமையும் வெளியிடாத காரணம் என்னவோ? அந்தக் கடிதத்தை என் பிளாக் பிடித்து போடக்கூடாது? இப்படியே சொ. முரு எழுதினதாக வைத்துக்கொள்வோம். அது என்னைக் கட்டுப்படுத்துமா?

சொ. முரு. "தனவைசிய நாட்டில் எல்லாரும் பேசப் பழகவேண்டும்; எல்லாரும் எழுதப் பழகவேண்டும்" என்ற நோக்கங் கொண்டு வியாசங்களைத் திருத்திக் கொடுத்தும், வியாசங்களை எழுதிக்கொடுத்தும் பாடம் செய்து சபைகளில் பிரசங்கஞ் செய்யப் பழகிக் கொடுத்தும், பிரசங்கம் செய்வதற்குக் குறிப்புக் கொடுத்தும் பல வாலிபர்களைப் பழக்கினார்கள். தங்கள் குருமூர்த்தியான ராய. சொக்கலிங்கன் உள்பட பல வாலிபர்களைச் சபைகளில் தூக்கிவிட்டு பக்கத்திலிருந்து முதுகைத் தடவிக் கொடுத்து உபந்யாசம் செய்யப் பழக்கிப் பத்திரிகைகளில் அவர்களெல்லாம் உபந்யாசம் செய்ததாக எழுதி ஊக்கப் படுத்தி வளர்த்துவிட்ட கதை இப்பொழுது உங்களுக்கு மறந்துபோயிருக்கும். உங்கள் குருமூர்த்தி ராய. சொக்கலிங்கன் போன்றவர் கோர்ட்டுகளில் போய் வக்கீல்கள் எழுதிக்கொடுக்கும் வாக்குமூலங்கள், அபிடவிட்டுகள் எல்லாவற்றிலும் கையெழுத்துப் போட்டு வருகிற கதையும், அவைகளைக் கட்சிக்காரரான ராய. சொக்கலிங்கனின்வாக்குமூலம், அபிடவிட்டென்று சொல்லிவருகிற கதையும் உமக்குத் தெரியாதா? அதைப்போல உம்முடைய பெயரால் அந்தக்காலத்தில் வெளிவந்த ஒரு கட்டுரையை "உன்னுடைய வியாசம் வந்திருக்கிறது" என்று சொ. முரு. எழுதியிருக்கிறார். இதிலிருந்து நீர்தான் அந்தக் கட்டுரையை எழுதினீரென்பதற்கு ஆதாரமென்ன? ஒன்பது வருஷத்திற்கு முன்னமேயே உமக்கு வியாசம் எழுதத்தெரிந்ததாக வெட்கமின்றிக் கூறுகிறீர். அது உண்மையாக இருந்தால் இதுவரை எவ்வளவோ அபிவிருத்தி அடைந்திருக்கவேண்டுமே? இப்பொழுது பத்துப்பேருக்கு முன்னால் நீர் இருந்துகொண்டு அவர்கள் கூறும் ஒரு விஷயத்தைப்பற்றி ஊழியன் பத்திரிகையில் இரண்டுபக்கம் வரும்படி ஒரு வியாசம் எழுதிக்கொடுப்பீரானால் உமக்கு எழுதத் தெரியுமென்பதை நான் ஒப்புக்கொள்ளுகிறேன். நீர் சரியான ஆண்பிள்ளையானால் இப்படிச்செய்யும். இல்லாவிட்டால் வெட்கமின்றி, மானமின்றி வியாசமெழுதுகிற வேலையை இன்றோடு விட்டுவிடும். ராய. சொக்கலிங்கனோடு நீர் சேர்ந்தபொழுதே உமக்குச் சொரணை இராதென்பது எனக்குத்தெரியும். இருந்தாலும் உம்முடைய புரட்டை வெளிப்படுத்தும் பொருட்டே இதனை யெழுதுகிறேன்.

"முழுமையும் நீர் எழுதினீரா?" என்று கேட்டதிலிருந்து கொஞ்சம் இவருக்கு எழுதத்தெரியுமென்று நான் ஒப்புக்கொண்டு விட்டதாகச் சந்தோஷப்படுகிறார். பாவம்! பரிதாபம்!! செட்டிப்பிள்ளைகளாய்ப்பிறந்த அத்தனை பேருக்கும் கொஞ்சம் எழுதத் தெரியுமென்பதை இன்னும் ஆயிரம்தரம் ஒப்புக்கொள்ளத் தயாராயிருக்கிறேன்.

> "உயர்ந்த மனிதர் சத்தியம் செய்யும்பொழுது தாம் வழிபடும் உயர்ந்த தெய்வத்தின் பெயரையே சொல்வார்கள். அதிலிருந்து அவர்கள் நிலைமையைக்கண்டு கொள்ளலாம். காளியம்மனும், ஈரத்துணியும், பெரிய குங்குமப் பொட்டும் வரவழைக்கப் பட்டிருக்கின்றன."

என்று சொல்லுகிறார். இப்படிக் கூறும் இவருடைய புத்தியே புத்தி! பக்காத்திருடர்களும பரிசுத்தர்களாக நடிக்கப் பார்ப்பது பரிதாபப் படத்தக்கதல்லவா? "கடவுள் முன்னிலையில் மறுக்க முடியுமா?" என்று இவர் கேட்டாரென்பதை வாசகர்களுக்கு நான் இப்பொழுது ஞாபகப் படுத்துகிறேன். கடவுள் எங்கும் நிறைந்திருக்கிறார். "பார்க்குமிட மெங்கு மொரு நீக்கமற நிறைகின்ற பரிபூரணானந்தமே" என்று தாயுமானார் திருவாய் மலர்ந்திருக்கிறார். அப்படியிருக்கஇவர், "கடவுள் முன்னிலையில் மறுக்க முடியுமா?" என்றுகூறுவதன் பொருளென்ன? எந்தக் கடவுளை இவர் குறிக்கிறார்? கோவிலுக்கு வந்து சத்தியம் செய்யச் சொல்லுகிறாரென்பது விளங்கவில்லையா? உயர்ந்த மனிதர்கள் கோவிலுக்குச் சத்தியம் செய்யக் கூப்பிடுவார்களா? தங்களை உயர்ந்தவர்களாக எழுதிக் கொள்ளும் இந்தப் பசர்களை ஏமாற்றி விட்டு இவர்களுடைய அழுகிய மனப்பான்மை வெளியே வந்து விட்டதே! என்ன செய்வார்பாவம்! சத்தியத்திற்கு உயர்ந்த கோவிலுக்குப் போகிறேனென்கிறார். கோவிலுக்குச் சத்தியத்திற்குக் கூப்பிடுகிறவன் கீழ்மகன் என்பதிலைய மென்ன? சிவன் கோவில் போன்றதற்கு இவர் கூப்பிடுகிறார் போலும்! கோவிலுக்குச் சத்தியத்திற்குக் கூப்பிடுகிற அயோக்கியனுக்குக் காளியம்மன் கோவிலும், ஈரத்துணியும், பெரிய குங்குமப் பொட்டும் சிறந்தன வென்பது உலகறிந்த தாருமன்றோ? இதைச் சொன்னவுடன் இவருக்குப் பயம் உண்டாய் விட்டது போலும்!

பிச்சப்பா சுப்பிரமணியன் கடிதங்களைப் பற்றி என்னென்னவோ எழுதுகிறார். இவரும், பிச்சப்பா சுப்பிரமணியனும் பிறந்த நாள் தொட்டுச் சிநேகமாயிருந்தவர்கள். இவ்வளவு நாளாகப் பரிசுத்தமாக இருந்த பிச்சப்பா சுப்பிரமணியன் இன்றைக்கு முகத்தில் விழிக்க முடியாத குற்றவாளியானதின் ரகசிய மென்னவோ? பிறந்தது முதல் நேற்றுவரை பரிசுத்தமாக இருந்த பிச்சப்பா சுப்பிரமணியன் ஊழியர் சங்கத்து ஆயிரத்தைநூறு ரூபாயைக் கேட்டவுடன் திடீரென்று அயோக்கியனாகி விட்டார் போலும்! இவர் கடிதம் வெளியிடுவதில் நிபுணராதலால் என் கையிலகப்பட்ட இவருடைய கடிதங்களு ளொன்றை வெளியிட்டுக் காட்டுகிறேன்.

உ
சிவமயம்.

சித்தியாவான் — அக்ஷய தை ௩
பழ. நாராயணன்.

திரு. பிச்சப்பா சுப்பிரமணியன்செட்டியார்,
இரங்கோன்.

மாசற்ற நேச !

நான் புதூரிலிருந்திருப்பின் தங்கூட அந்து வந்திருப்பேன். இனிமேல் இரங்கூன் பார்க்கச் சமயம் வாய்க்கவா போகிறது அதிலும் பணத்திற்கடிமைப்பட்ட எனக்கு தன்னை நண்பனாக முன் ஜென்மத்திலேயே பெற்றிருப்பதாக யெண்ணுவதுண்டு. அதற்குச்சான்று நாம் சிறு பிள்ளையாக இருக்கும்போதே மன மொத்தவர்களாக இருந்தோம். தான் நிஷ்காமியமாக உழைத்து இருக்கிறாய் நான் காமியமாக உழைத்துக்கொண்டு இருக்கிறேன் தன்னுடைய நோக்கத்துக்கு மாறுபட்டவனல்ல வாயினும் தன்போல் நடந்துகொள்ள முடியவில்லை இந்த ஜென்மத்தில் நிஷ்காமியமாக வேலை செய்ய முடியாவிடினும் அடுத்த ஜென்மத்திலாவது முடியு மென்று நான் எண்ணிக்கொள்ளுவதுண்டு. ஆனால் மற்றொன்று பெற முடியுமா என்ற சந்தேக மட்டுமுண்டு அது யாதெனின் அடுத்த ஜென்மத்தில் தன்னையும் நண்பனாய்ப் பெற முடியுமா? என்ற சந்தேக முண்டு இறை யெண்ணம் யெப்படியோ,

இங்ஙனம்
அன்பன்
பழ. நாராயணன்

இந்தக் கடிதத்திலிருந்து இவருடைய ஒழுக்கும், நட்பின் தன்மையும், முப்பது வருஷம் சிநேகம் செய்த ஒருவரைப் பணத்திற்காக அயோக்கியத்தனமாகத் திட்டுகிற குணமும், பிறகும் வெட்ட வெளிச்சமாக விளங்கவில்லையா? இப்படிக் கடிதங்கள் பல இருக்கின்றன. அவை ஒன்றன்பின் ஒன்றாக வெளிவரும்.

இதற்கப்பால் 'நான் அப்படிச் செய்தேனா? இப்படிச் செய்தேனா? தீர்த்துக் கொடுத்தேனா' என்று ஜன்னி கண்டவன் மாதிரி புலம்புகிறார். இப்படி எதற்காகப் புலம்புகிறாரென்பது விளங்கவில்லை. அப்படிச் செய்தவர் யாரென்பதும் தெரியவில்லை. முந்தின கடிதத்திலும் இப்படித் தான் புலம்பினார்.

> "நீங்கள்தான் மறைவாக ஒன்றையும் வைத்துக்கொள்ளமாட்டீர்களே? எல்லாவற்றிற்கும் நேரே வருகிறது தானே வழக்கம், உங்கள் குருமூர்த்தி மன்னவர் தமக்கும் அஞ்சமாட்டாரே? இந்த இடத்தில்மாத்திரம் என்ன முக்காடு வேண்டியதிருக்கிறது? அப்படித் தப்பிதங்கள் செய்தவர் யார்? அவர்கள் பெயரென்ன? எந்த ஊர் தேதி? எத்தனை மணிக்கு? எந்த இடத்தில்? சாட்சி யார்? இவைகளையெல்லாம் விளக்கமாக ஒவ்வொன்றுக்கும் எழுதுங்கள்"

என்று நான் ஐப்பசி உகூ-உ குமரன் அனுபந்தத்தில் எழுதியிருக்கிறேன். அதையும படித்துப் பார்த்துவிட்டு கார்த்திகை-மீ ரு-உ ~~ஊழியனில் இடையன் நிவசங்~~ கொடுத்தமாதிரி திருப்பித்திருப்பி ஒப்பிப்பதின் அர்த்தமென்ன? அவைகளை இன்னார் அப்படிச் செய்தார் என்று ரூபிக்காதவரையில் இவரும், இவருக்கு வியாசம் எழுதிக் கொடுக்கும் குருமூர்த்தியும், இவர் வகை மனுஷ்யாளும் தான் அவற்றிற் குட்பட்டவர்கள் என்பதில் ஐயமில்லை. இவற்றுள் பல விஷயங்களுக்கு இவர்கள்தான் தகுந்தவர்கள் என்பதற்குப் பல ருசுக்கள் என்னிடமிருக்கின்றனவென்பதை ஞாபகப்படுத்துகிறேன்.

"மலம்" என்ற சொல்லைக் கேட்டவுடனேயே மிகவும் வருத்தப்படுவதாகப் புலம்புகிறார். இவருடைய அத்தியந்த சிநேகிதரும், அருமைக் குருமூர்த்தியுமான ராய. சொக்கலிங்கன் மலத்தைத் தின்றே விட்டாரே? அதை உலகமறியுமே! பெண்ணுக்குப் பணம் வாங்கிச் செய்யும் கல்யாணத்திற் சாப்பிடுவது மலம் தின்பதை ஒக்கும் என்று முன்னொருநாள் தனவைசிய ஊழியன் பத்திரிகையில் எழுதியிருக்கிறாரே? பின்னால் அமராவதி புதூரில்பெண்ணுக்குப் பணம் கொடுத்துச் செய்யும் கல்யாணத்திற் சாப்பிட்டிருக்கிறாரே? அதற்கு என்ன பிராயச்சித்தம் நீர் செய்துகொள்ளப்போகிறீர்? அந்தப் பத்திரிகையை நீர் படிக்கவில்லையா? படித்திருந்தால் அதுவிளங்கவில்லையா? அந்தப்பத்திரிகையைப் படிக்கவில்லையென்று தடுமாறிச் சொல்லிவிடாதேயும். ஊழியன் பத்திரிகையை ஒன்று விடாமல் படித்திருக்கவேண்டும். இல்லாவிட்டால் ஊழியர்சங்க அங்கத்தினரென்று உமது குருமூர்த்தி ஒப்புக்கொள்ளமாட்டார். இது ஞாபகத்திலிருக்கட்டும்.

நெடுஞ்செவியன்.

(பத்திராதிபர்) சொ. முருகப்ப செட்டியாரால் காரைக்குடி 'குமரன்' அச்சுக்கூடத்தில அச்சியற்றிப் பிரசுரிக்கப்பெற்றது.

